கஉ. தம்மில்இயைந்து.
கங. சுரபி - பசு. அரசு - அரசன்.
கரு. கவிழ்தலை - கவிழ்ந்ததலை. சேண் - நெடுந்தூரம்.
கசு. சொல்தவறுவண்ணம். விடை அருளுதி. அவன் - தருமபுத்திரர்.
கஎ. திறன் அல்லாதவற்றை.
உ0. தடுத்தோர் - தடுத்தவர்களுடைய. நடாத்துகு - நடாத்துவேன்.
உக. உழையர் - பக்கத்துள்ளார்.
உங. பழிச்சினன் - துதித்தான்.
உச. தூநிதிஅளித்தனன்.
உரு. வேங்கடத்தில்.

---

## உ - ஆவதுஅத்தியாயம். (ப. கங.)

க. பொன்முகரித்திருநாடு - ஆற்றூர்வளநாடு.

உ. வரையுலகு-குறிஞ்சிநிலம்.காளிதன்வாழ்க்கையஉலகு - பாலைநிலம். தளவம் - முல்லை. காடுறைஉலகு - முல்லைநிலம் தீம்புனலுலகு - மருதநிலம். புன்னைப்பெருமணலுலகு - நெய்தல்நிலம்.

ங. அளாய் - அளாவி; கலந்து. தூங்கும் - தங்கும். முழை - குகை. இறால் - தேன்கூடு.

ச. குரவை - குன்றக்குரவை. வேங்கை - வேங்கைமரம். தூய் - தூவி. தொண்டகம் - ஆகோட்பறை.

ரு. அங்கி - அக்கினி. ஆள்வழக்கு - ஆடவர்செல்லுதல். சில் இடை - சிலஇடம். பரல்முரம்பு - பருக்கைகற்களாலாகியமேடு.

சு, விடர் - வெடிப்பு. உழை - மான்.

எ. ஆம்பலந்தீங்குழல் - வெண்கலத்தாற் குமுதவடிவாக அணைசுபண்ணிச் செறிக்கப்பெற்ற இனியஓசையையுடையபுல்லாங்குழல். பொதுவர்- இடையர். கொன்றையந்தீங்குழல் - கொன்றைப்பழத்தாலாகிய இனியகுழல்; சிலபபதிகாரம், சு0க-ம்பக்கம் பார்க்க. பதலை - தயிர்த்தாழி. குழக்கன்று - இளங்கன்று

அ. உடம்புகூன் படலும் - உடம்புவளைந்தபடலும்.

கூ. அரில்-பிணங்குதல். சுறுப்பகடு- ஆண்சுறு. பாவையின்தேவை - வருணதேவனை. சுறுக்கோட்டில் - சுறுமீனின் கொம்பில்.

க0. கான்ற-கக்கின; வெளிவிட்ட. அளவர் - உப்பளப்பேர். குரம்பை - குடிசை. வளை - சங்கு. கைதை - தாழை. பெண்ணை - பனை.

கக. தீம்புனல்நாடு - மருதம்.

கஉ. மென்பால் - மருதம்.

கங. படுகர் - படுகை. தொழுதி - ஒலி. உகண்டு - பாய்ந்து.

கச. பணிலம் - சங்கம்.

கரு. படப்பை-தோட்டம். தாழை- தென்னை. சூதம் - மாமரம்.

கசு. அறல் - நீர். கீண்டு - கிழித்து.

கஎ. குரகதமுகமாய் - குதிரையின் முகம்போன்று. சாலி - நெற்பயிர்.

கஅ. செருத்தல் - மடி. குண்டு - ஆழம். வள்ளை - ஒருவகைக்கொடி.

ககூ. கவரிப்பாளை - கவரிபோலும் பாளை.

உக. அலம்ப - முழங்க. பார்ப்பை - குஞ்சினை.

உஉ ‘பவளச் செந்நெல்’, ‘செழும்பவளக்கொழுஞ்சாலி’ என்பர்பின்னும்; உஅ, ங0.

உங. கிணை - ஒருவகைப்பறை. காரேறு - எருமைக்கடா. தொளி-சேறு.

உச. அமுதுஅடு - உணவுசமைத்தலாலுண்டாகிய.

உசு. குணபால்-கிழக்குத்திசையில். பாசுபதம் பாசுபதாஸ்திரம். கலுழன் - கருடன்.

உஎ. காவில் - சோலையில். பைந்தேன் - செவ்விததேன். கொண்டல் - திஞ்சு.

உஅ. கறித்து - கடித்து. சங்கத்தாளம்; சங்கத்திலிருந்துண்டாகிய முத்து.

உகூ. ‘வருக்கைக்குடக்கனி’ என்றூர்முன்னும், கக. கீண்டு - கிழித்து.

கோழ் இலைய - செழித்த இலைகளை யுடைய.

௩0. கன்னல் - கரும்பு. தாரகை - நக்ஷத்திரம்.

௩௧. மதுச்சாடி-தேன்சாடி. நாறு- நாற்று. சேதாம்பல், வெள்ளாம்ப லெனவிளர்ப்ப. பைங்குவளை, செங் குவளையெனச்சிவப்ப சேதாம்பலெ ன்றது, கீழுதட்டை. பைங்குவளையெ ன்றது கண்களை.

௩௨. துணை - ஆண் அன்னம். குண கரை - கீழ்கரை.

௩௪. எற்றைஞான்றினும் - எந்நா ளிலும்.

௩௬. கபாடம் - கதவு.

௩௭. ஈரமும் மன்றலுங்கொண்டு தென்றல்தவழுறஎன்றதனுல், தென் றலின் நடைகள்மூன்றும் கூறப்பெ ற்றன; அவையாவன: சைதநியம், ஸௌரப்பியம், மாந்தியமென்பன. பின்னுள்ள "சுந்தரத்தெய்வக்கங்கை" (ப. ௭௩ - ௨௩) என்னும்செய்யுளி லும் தென்றல் இவ்வாறுகூறப்பெற்று ள்ளது. வீற்றுவீற்று - வேறுவேறு.

௩௮. அவி - ஹவிஸ். பண்ணவர் - தேவர்.

௩௯. களங்கனி - களாப்பழம்.

௪௧. நெறிதல்-நெளிதல் படலம் - கூட்டம்.

௪௨. கவனம் - வேகம்.

௪௩. கண்ணுற்று - தரிசித்து.

௪௫. பெட்பு - விருப்பம். [வர்.

௪௬. தந்திரத்தலைவர் - சேனைத்தலை

௪௭. குவடு - மலையுச்சி. இளமதி இருவின் தேனினை இழிக்கும்.

௪௮. கவரி - கவரிமான். நரந்தம் - கஸ்தூரி. நாவி - கஸ்தூரிமிருகம்.

௪௯. பாசடைப்பள்ளி = பசுமை அடை பள்ளி-பச்சைஇலையால்ஆகிய தவச்சாலை; பன்னசாலை. பைம்புள் அடங்கின. திருக்கழுக்குன்றத்தில் இரண்டுபறவைகளே தவஞ்செய்கின் றன, இம்மலையில் எல்லாப்பறவைக ளும் தவஞ்செய்கின்றன என்றார்.

௫0. உளக்கண் - ஞானக்கண். உள் ஒளி - சிவம். காஞ்சி மாவடியில - காஞ் சீபுரத்தில் மாமரத்தின் அடியில் அதில் அம்பிகை தூண்டாவிளக்குஏற்றிவை த்தமை, "அலகி னீடவுத் தறப்பெ ருஞ் செல்வி யண்ட மாந்திரு மனை க்கிடு தீபம்" (பெரியபுராணம், திரு க்குறிப்பு. ௯௨.) என்பதனுலும் அறி யலாகும்.

௫௨. அடைந்ததற்கு - அடைந்த யானைக்கு. மடங்கல் - நரசிங்கம். தொ லைத்ததாகியசிம்புள் - ஸ்ரீசரபமூர்த்தி.

௫௩. காளன் - இத்தலத்தில் வழி பட்டபாம்பு. மதியும் அரவும் ஒன்றி வாழ் சடிலம், கருத்துடையடை.

௫௪. செங்கமலம் திருமகள் வந்த தையும், பணிலம் திருமால்வந்ததை யும், வெள்ளோதிமம் பிரமதேவர்வந் ததையும்,வெண்டாமரை கலைமகள்வந் ததையும் தெரிவிக்கும்.

௫௫. நான்கலர் - கோடடுப்பூ, கொ டிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ. செருத்தணி - திருத்தணிகைமலை. அதிலுள்ள சுனை மலர் - நீலோற்பலமலர்; திருத்தணி கைமலைச்சுனையில், காலை, உச்சி,மாலை என்னும் முக்காலங்களிலும் உற்பலம் மலர்தலை, கந்தபுராணம், வள்ளியம் மைதிருமணப்படலம், ௨௨௨ - ஆம் செய்யுளாலுமுணர்க.

௫௬. ஆலுவ - முழங்குவ. வேள் - மன்மதன். சின்னகுயில் - சின்ன மாகியகுயில்; சிறியகுயிலென்பது மற் றொருபொருள். ஒலியுடைமையாற் பெரிய.

௫௭. கூடல் - மதுரை. மதுரை யில் நாரை ஊனையொழித்து நியமத் தோடிருந்தசரித்திரம் இங்கே அறிய த்தக்கது.

௫௮. தொழுதி - கூட்டம். கூடற் கருங்குருவி தானும்தன்னினமுமே பயனுறஎண்ணினமையின்,களவுடை யதென்றார்.

௫௯. மதுரையிற் புலிமுலையைப் புல்வாய்க்குஅருத்தியது ஒரு திருவி ளையாடல் "புலிமுலை புல்வாய்க் கரு ளினை போற்றி" (திருவாசகம், போற்றி, ௨0௭), "தழல்விழிப் பேழ் வாய்த்த தரக்கின் றுளிமுலை, பைங்கட் புல்வாய் பாலுணக் கண்ட, வருணி றை பெருமான்" (கல்லாடம், ௪௨).

இதனைத் திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்தாலுமுணர்க.

சுக. இந்திரன், இராமன், முசுகுந்தன் இவர்கள் இத்தலத்திற்பூசித்துப் பேறுபெற்றவர்கள்.

சுஉ. தாழ்ந்த ஆம் - தாழ்ந்தனவாகிய.

சுசு. இடிபட - இடியோசையுண்டாக.

சுஎ. ஆரவடம் - முத்துவடம்.

எ0. தாழை - தென்னை. வருக்கை - பலா.

எக. பூகதம் - பாக்குமரம்.

எஉ. சரளம் - ஒருவகைமரம்.

எங. பச்சிலைகள் - பச்சிலைமரங்கள். மதூகம் - இருப்பை. நாரத்தம் - நாரத்தை. சம்பீரம் - எலுமிச்சை. ஞாங்கர் - பக்கம்.

எரு. அரக்கு - சிவப்பு.

எசு. கம்புள் - சம்பங்கோழி. காரண்டம் - நீர்க்காக்கை.

அ0. மிருதி - தருமசாஸ்திரம். திப்பியஞானம் - தெய்வத்தன்மையுள்ள ஞானம்.

அங. எடா - எடுத்து.

அச. கொடா - கொடுத்து. ஈங்குவா என - இங்கு வாவென்றழைத்து. ஆதனத்து இருத்தி. பூகமன் - உபசாரம்.

அசு. தோம்இல் காட்சியன் - குற்றமற்ற அறிவினையுடையவராகிய. மா மகிழ்ச்சியால் - மிக்க மகிழ்ச்சியோடு. அது வந்தது.

அஎ. சுற்றமும தானும் அருந்தினன். என்ப, அசை.

---

## ங - ஆவதுஅத்தியாயம். (ப. உஅ.)

க. ஆண்டகை - அருச்சுனன்.

உ. சிரத்து இதழியைமிலைந்த. காரணத்தால் யானே மிகவும் பாக்கியவான்.

ங. நதிக்கண் - நதித்துறையில்; "பொன்முகரித தண்டுறையெம்மத்தன்" என்பர்பின்னும்; ரு.

ரு. பரம - பாரம்; கடமை.

எ. குரு - ஓர்அரசன். தரும் ஆதரவால்.

அ. இறையும் - சிறிதும். 'எங்குரு' என்றது, அங்கிராவை; இப்புத்தகம் எசு - ஆம் பக்கத்துள்ள கஙஉ - ஆம் பாடலாலுணர்க.

கு. அத்தலம் - பிறதலம்.

கங. தவம்போல் யாதுசெய்தது வோ.

கசு. நீலை - ஒருயோகினி; ஙக - ஆம் செய்யுளைப்பார்க்க.

கஎ. பண்ணவர்யாண்டு - தேவவருடம். யாண்டுகாறு - வருடம்வரையில். கேள்வன், எழுவாய்.

கஅ. முன்னவன் - இறைவன்.

ககூ. மறித்தும் - மீட்டும்.

உக. மேனுளில் தென்கைலாயமென்றும் இதற்குப்பெயருண்டு.

உசு. மொழியை வழங்கி.

ஙரு. பஃறலை அநந்தன் - பலதலைகளையுடைய ஆதிசேடன்.

ஙகூ. தந்து - நூல்.

ச0. அகடு - வயிறு. சிகரம் - கோபுரம்.

சக. முற்றி - முதிர்ந்து.

சஉ. தேங்குதல் - நிறைதல்.

சங. கணம் - க்ஷணம்.

சச. குரம்பையென்றது, சரீரத்தை.

சசு. யார் கேட்பாரோ? அவர் வாழ்வார்.

சஅ. ஆர்ப்பரவும் - ஆர்ப்புஅரவம்.

சகூ. குன்றி - குன்றிமணி. தழையாடியஆடை.

---

## ச - ஆவது அத்தியாயம். (ப. நரு.)

உ. முகிழ்த்தநிலா - அரும்பியபிறை. இங்கேகுறித்த மாயை - சிவமாயையென்னும்பெயரால் முதனூலில்வழங்கப்படுகின்றது. பாரி - மனைவி. தன்மறந்து - தன்னைமறந்து

ச. குழுமி - கூடி. நேர்படு - எதிர்ப்பட்ட.

எ. கழியும் - மிகுந்த. உணர்வுஅழியும்.

கО சோதியையுடைய இமையவர்.

கக. இயற்கையைப்பாற்றி - இயல்பைவிட்டுவிட்டு.

கஉ. ஐயரை - கீழ்மக்களை.

கஙு. பிறந்து - பிறத்தலால். இறந்துபாடு - இறந்துபடுதல்.

கசு. மகத்து - மகநக்ஷத்திரத்தில்.

கஎ. நூனம் - குறைவு.

உங. பணிந்தஞான்றேபோயிற்று.

உகூ. மரபுளி - விதிப்படி.

---

## ரு - ஆவது அத்தியாயம். (ப. நகூ.)

க. முன்தவத்தால்.

ச. அழுங்கும் - வருந்தும்.

சு. பின்னர் - பின்பு. மன்ற - தெளிவாக; இஃது ஓரிடைச்சொல்.

எ. வேகம் - நஞ்சு, கோபம் செவ்வே - செவ்வையாக.

அ. அாலைக்கற்கள் - ஒருவகைச் சிறுகற்கள்.

கூ. நன்கு பெறுவேன். திருமுன் - சந்நிதியில்.

கக. வழுவை - யானை. அழிதுயர் - மிக்கதுயர்.

கங. உடல்நெருங்கி.

கரு. புள்ளரசு - கருடன்.

கஅ. மாதிரங்கள்பரிப்போர் - திக்பாலர். இருவராகியமருத்துவர்.

ககூ. செங்கைமுகிழ்த்தனர் - கைகுவித்தார்.

உО. புட்கரம் - ஒரு மஹாதீர்த்தம்.

உக. பருப்பதம் - ஸ்ரீசைலம்.

உஉ. ஆதிபுராணமும் - முதன்மையுள்ள புராணங்களும்.

உங. தென்றலங்கன்று - இளந்தென்றல்.

உச. அளிகள் வேழமதத்தைவிட்டு ஓடிப்பற்றும்படி.

உரு. குருந்தம்பூவும் நிலாவும்போல் விளங்கிய பால்நிறமெய்.

உகூ. வயங்கு அபயம்.

ஙО. 'சயசய' என்பதற்கு எல்லாருக்கும் மேற்படவிளங்குக என்பது பொருளென்பர்.

ஙஎ. சகமானது மாயையின்விதமெனவிட்டு.

ஙஅ. தகைந்து - தடுத்து.

சО. ஒருமுதல், விளி.

சக. 'ப்ரஹ்மாதிஸ்தம்பபரியந்தம்' என முதனூலிற்காணப்படுகின்றது.

சஉ. அல்லவ, விளி.

சகூ. கருணைக்கடலே. [ய்வாய்.

சஅ. உரோதிப்பிப்பாய் - அழச்செ

சகூ உருதம்பண்ணும் - ஒலிக்கச்செய்யும்; ருது - கத்தல்.

ருО. திராவம்புரியும்தொழில் - உருக்குதல்.

ருக. ரு - பிறவித்துன்பம்; திராவணம் - ஓட்டல். சிவதரம் - மங்கலப்பொருள்களுள் உயர்ந்தது.

ருஉ. பவிக்கும் - உண்டாகும். மிகுவாய் - மிஞ்சியிருப்பாய். பவங்கடந்து மேவும்பொருட்டுப் பாவித்திடுவர்.

ருச. மாதேவன் - மகாதேவன். கீர்வாக்கு.

ருரு. பிருகத்துவம் - பெரிதாயிருத்தல் எதைக்காட்டிலும் பெரியது வேறொன்றும் இல்லையோ அது பிரமமென்பர். விண்டு - விஷ்ணு; வியாபகமுடையவர். பொருட்டு - காரணம்.

ருசு. பயனை - பிரயோசனத்தை. சடம் - அறிவில்லாதது.

ருஅ. மெய்த்த - உண்மையுற்ற.

சுО. மகோதய - பெரியவைகள் உண்டாவதற்கு இடமாக இருப்பவரே.

௬௧. காளஹஸ்தியென்பது காளத்தியென மருவியது.
௬௭. உலம்புதல் - முழங்குதல்
௭௧. இத்தீர்த்தமென்றது, பொன்முகரியாற்றை.
௮௧. தேறல் - தேன்.

## ௬ - ஆவதுஅத்தியாயம். (ப. ௫௧.)

௧. கரிசு - குற்றம்.
௨. ஆயிரம்அசுவமேதம்.
௩. அழிதுயர் - மிக்கதுயர்.
௪. இணையா - ஒப்பாக.
௫. இதழி - கொன்றை. உணர்வு இல் மாந்தர்.
௬. புரக்கும் - காக்கும். நிரந்தரம் - எப்பொழுதும்.
௭. உடையோர் - தலைவர்.
௮. அளிக்குதும் - பாதுகாப்பேம்.
௯. பிறவிக்குருடர் - அஜ்ஞானமுடையவர்.
௧0. பரித்தவன் - தாங்கியவன். கருமநிரதன் - தொழில்களை இடைவிடாமற்செய்பவன். அல்லி - அகவிதழ்.
௧௧. பரிந்து-அன்புகூர்ந்து. பகுதி-பகுப்பு.
௧௩. ஞாதிரு - அறிபவன். ஞேயம-அறியத்தக்கது. பாவகம் - ஞானம். அண்டஅரிதாகி - அணுகுதற்கு அரியதாகி. ஒற்றுமையாற் பேதமில் இன்பம் - ஸகஜாநந்தம் - சேதனம் - அறிவு.
௧௪. முப்பத்தாறு - ௩௬ தத்துவங்கள்.
௧௬. இந்தனம் - விறகு. விரகு - உபாயம்.
௧௭. விரிசுடர் - அகண்டசோதி.
௧௮. ஒட்டை - ஓரளவு. இனமுயென்று - செய்வாயென்று
௨௧. வித்தேச்சுரர்-வித்தியேசுவரர். முதற்கணத்தோர் - கணத்தலைவர்.
௨௨. வியோமம் - ஆகாயம்.
௨௭. நாள் - தினம்.
௩௧. சரிதங்கள், அறிதற்கரியன; ஏத்தப்பெறுவன; இசைக்கப்பெறுவன.
௩௬. கண் அகழ்ந்து. நெடுமாற்கு அளித்தவன்.
௩௭. கடு - விஷம்.
௩௮ பொற்குவடு - மேரு. இந்திரைகொழுநன் - திருமால். சாதித்து - கருவிகளாகச்செய்து.
௩௯. விற்கோலம் - வில்வீரக்கோலம். உங்கரித்து - உங்காரம்செய்து.
௪0. ஓதாக்கள் - யாகஞ்செய்பவர். ஒருத்தரால்நிறுத்தா
௪௨. ஞமலி - நாய். கிராதி - வேடிச்சி.
௪௩. முண்டகமுதல்வன் - பிரமதேவர். மருப்பு இரலை - கொம்பையுடையகலையான்.
௪௪. வான் அரமகளிர்.
௪௭. ஒருவி - நீங்கி.
௪௮. பொற்றகட்டு இதழ் - பொற்றகடுபோன்ற மடல்.
௪௯. அதள் உடை - தோல் ஆடை.
௫௩. குடிலை - பிரணவம்.
௫௫. கனக்க - மிக.

## ௭ - ஆவதுஅத்தியாயம். (ப. ௫௯.)

௧0 செவம் - ஜபம்.
௧௨. மந்திரங்களாகியமறைகளே. மானிடத்து - மானிடப்பிறவியுள்.
௧௧. எத்துணை - எவ்வளவு.
௨௮ போன்று ஒக்கும்.
௩௧. மாகத்தில - மாசிமாதத்தில்.
௩௫. மணிகன்னி-மணிகர்ணிகை
௪௧. வதிவள் அத்துர்க்கை.
௪௨. திகிரியேந்துமின் - மஹிஷாஸுரமர்த்தனி. ராயசூயம்-ஒருயாகம்.
௪௩. அதிராத்ரம் - ஒருயாகம்.
௪௪. தயங்கும் - விளங்குவார்.
௪௫. வாசபேயம் - ஒருயாகம்.
௪௬. திரியம்பகமந்திரம்.

௫0 பதுமராகம் - மாணிக்கம்.
௫உ மகரமாதம் - தைமாதம்
௫௩. அப்பொழுதானது கிரஹண காலத்திலும் பொலிவினையுடையது.
௫௪. வாசிகை-கோத்தமாலை இண்டை, சுருக்கு, தொடை, சூட்டு இவை மாலைவிசேடங்கள்.
௫௫. மலயம் - பொதியில்மலை. பொன்னம்பர் பூவம்பரென்பன, வாசனைப்பண்டங்கள்.
௫௬. பொருனை - தாம்பிரபன்னி நதி.
௫௯. தொண்டை-கொவ்வைக்கனி. கொடிநுசுப்பு - பூங்கொடிபோன்ற இடை. உரை - சொல்.
௬0. களாசி - காளாஞ்சி.
௬௪. திவளும் - விளங்குகின்ற.
௬௫ காவணம் - பந்தர்.
௬௬. சேருடி - ஒருவகைவிருது. பதாகை - பெருங்கொடி. [ழும்.
௬எ. குவால் - குவியல். துகிர் - பவ
௬௯. வீரபாளிதபபடாம் - வீரக்கொடி; பாளிதம் - அடையாளத்தையுடையது.
எ0. பாளிதம் - பச்சைக்கருப்பூரம் பாகு - பாக்கு.
எ௬. மூவிலைவேல் - சூலம்.
எ௯. ஐந்து அவித்தார் - ஐம்புலன்களையும்வென்றவர். அயுதம் - பதிறாயிரம்.
அ0. பைத்தலைக்கு - (ஆதிசேடனது) படங்களையுடையதலைக்கு.
அஉ முக்குறும்பு - காமம், வெகுளி, மயக்கம். மான்றல் - மயங்குதல்.
அ௩. வகையால் தினமும்.
அ௪. ஆதியாம் திதி - பிரதமை. கன்னலின் பாகு - வெல்லம்.
அ௬. சாகினி-கீரை. கடு-கடுக்காய்.
அஎ. மதி பரிதியைச்சேர்திதி - அமாவாசை.

அ௯. அறன் ஏதுவா - தருமம்காரணமாக.
௯௩. பிண்டி - மா.
௯௫. பூசையை.
௯எ. இலிங்கம் இரண்டு-திருக்கோயிலிலுள்ளதொன்று, மாவாற்செய்த புதியதொன்று.
௯அ புத்திலிங்கம் - மாவாற்செய்த புதிய இலிங்கம் அத்தன் - சிவபெருமான்.
௯௯. பங்கினர் - முடவர். அந்தர் குருடர் வெதிரர் - செவிடர்.
க0உ. தணந்திடா - நீங்காத
க0௩ மயிற்பறவைகளால் தாங்கப்பெற்ற விமானத்தின்மேலே. காணு - கண்டு.
க0௪. குலிசபாணி - இந்திரன்.
க0௫. கற்பம் - பிரமதேவருடைய வாழ்நாள்.
க0௯. பெரிதும் உத்தமம்.
ககக 'அத்திதி' என்றது, பௌர்ணிமையை.
ககஉ. இதனால், திங்களணியண்ணலுடையதிருவுருவம் அமைக்கும்விதம்கூறப்பெற்றது.
கக௩. இதனால், திருமாலின் திருவுருவம் அமைக்கும்விதம் கூறப்பெற்றது.
கக௪. முயன்று அமைக்க.
கக௬. அட்டிய - வைக்கப்பெற்ற.
கக௫ - எ. இவற்றால் தக்ஷிணாமூர்த்தியின் திருவுருவம் அமைக்கும்விதம் கூறப்பெற்றது.
கக௯. அர்த்தநாரீசவடிவம்.
கஉ0 கட்டங்கம் - கட்வாங்கம்.
கஉ௪. இன்காதலினால் - இனிய விருப்பத்தால்
கஉ௫ பசியதேறல் - அம்பிகை.
கஉ௬. ஏனம் அனம் ஆகி - பன்றியும் அன்னமுமாகி.

---

## அ - ஆவதுஅத்தியாயம். (ப. எ௬.).

௫. புரம் - இங்கே சிற்றூர். பஃறொழில் - பல்தொழில்.
எ. இருப்பாய் - இருப்பிடமாய்.

அ. கன்னல் கருப்பஞ்சாறு. தேறல் - கள். இறலி - இத்தி. சான்மலி - முள்ளிலவு.

கக. மகி - மகிமையையுடையது. உப்பு உததி.

கரு சாமம் - சியாமம். சிங்கம் - கேசரி. இக்கு - இக்ஷு.

கஎ. வெம்மை - உஷ்ணம். மணிவரை - ரத்நசைலம். திவாகரம் - திவாகிருது.

கஅ. இசைக்கியாதி - இசையையுடைய கியாதி. மாணவகர் - சிஷ்யர்.

கக. வேணுமத். துதிமான் - த்யுதிமான்.

உ0. வித்து - வித்தியு. தெமிகர் - தமிகர். சுண்மிகள் - சுஷ்மிகள்.

உக. அரிதம் - ஹரிதம் வயித்துதம் - வைத்துதம்.

உஉ. விதிருணை - விதிருஷ்ணு. கண்ணர் - கிருஷ்ணர்.

உ௩. கேமகம் - க்ஷேமகம்.

உ௪. சிகியும் விபாபையும்

## கூ - ஆவதுஅத்தியாயம். (ப. அ0.)

க. கமலக்கண்ணிகை - தாமரைப் பூங்கொட்டை.

உ. தாள் - அடி.

௩. மஞ்சுவான் - ஒருமலை.

௪. சுபக்ஷம். விருஷம்.

ரு. தொன்மரம் - ஆல். போதி - அரசு.

சு. பொழில்களென்னும் எழுவாய், அடுத்தசெய்யுளிலுள்ள நிற்குமென்னும் பயனிலையைக்கொண்டு முடிந்தது.

எ. தெக்கிணத்து - தெற்கில். எமமும் இமகிரியும்.

கூ. கண்டமென்பது இங்கு வருடமென்னும் பொருளில் வந்தது

கக. பன்மூவாயிரம் - பதின்மூவாயிரம்.

கஎ. இறலிக்கனி - இத்திக்கனி.

உஉ. எண்ணிருபிராயம் - பதினாறுபிராயம்.

உஅ. சனபதம் - நாடு.

௩க. பத்திராசுவமுதலிய கண்டங்களில் திருமால் முறையே ஹயக்கிரீவரூபியாயும் கூர்மரூபியாயும் வராகரூபியாயும் மச்சரூபியாயும் எழுந்தருளியிருக்கின்றனர்.

## க0 - ஆவதுஅத்தியாயம். (ப. அரு.)

௪. இவறுதல் - கொடுக்கவேண்டிய இடத்துக்கொடாமை.

சு. பழங்கண் - துன்பம்.

அ. பவம் - பிறவி.

கூ. அம்மகமென்றது, புத்திரகாமேட்டியை.

கஅ. நந்தாவனம் - கெடாதவனம். சந்து - சந்தனம்.

கக. பூவர்: ஊர், பகுதிப்பொருள் விகுதி.

உஉ. மூ எழு சுற்றும் - இருபத்தொரு தலைமுறை.

உ௩. தம்பம் - பற்றுக்கோடு. அமருலகு - அமரருலகு.

உ௪. மாரவுரவம் - மகாரௌரவம்.

உஎ. வயிர்த்த - வயிரங்கொண்ட. போத - மிக. எள் எள்ளாய்; "எள்ளளாயரிகுவர்" என்பர் பின்னும், ௩0.

௩0. பாவகாரிகள் - பாவங்களைச் செய்பவர்கள்.

௩க. தற்பம்=தல்பம் - படுக்கை. மாபாதகம் - மகாபாதகம்.

௩௩. உய்வழி - பிழைக்கும்வழி. இழுதையர் - மூடர்.

௩௪. ஏற்று - யாது.

௩எ. தகை - தாகம். விஞ்சை வித்தை முறுக்குறைவு - பேறிவு.

௪க. பொறை அரு துயர் - பொறுத்தற்கரிய துன்பம்.

## ௧௧ - ஆவது அத்தியாயம். (ப. ௬௧.)

௫. கவலுநர் - கவலையடைபவர்.
௬. மட்கல் - ஒளிமழுங்குதல்.
௯. மடி - சோம்பல்.
௧0. சாந்திகம் - அரிட்டநிவிர்த்தியின்பொருட்டுத் தேவர்களைக்குறித்துச் செய்யும் கிரியை. [யாததுவும்.
௧௫. ஒறுத்திடாததுவும் - தண்டி
௧௭. உறுகண் - துன்பம். மாற்றமாயுள்ளோர் - பகைவர்.
௧௯. மந்திரம் - ஆலோசனை.
௨0. உசாவுக - வினவுக. ஒற்று - ஒற்றர்கள்.
௨௧. ஆள்வினை - முயற்சி. அசாவாளுகி - தளராளுகி.
௨௨. கனி - சுரங்கம். கரம் - திறை. பல்வியமாயுள்ள - உயர்ந்தனவாயுள்ள பொருள்களை.
௨௬. தமக்கு என்ஞான்றும் நல்லவற்றை வேண்டினவர். அல்லது பாவம்.
௨௯. மகவினை - யாககாரியத்தை.
௩0. எள், சந்தனம், பால் நெய்முதலிய ரஸப்பொருள்கள் என்பவற்றைத் தாம் விலைக்குக்கொண்டு வில்லார்.

---

## ௧௨ - ஆவது அத்தியாயம். (ப. ௬௬.)

௩. அங்கம் - வேதாங்கங்கள்.
௪. அழல்வேள்வி - இங்கே சமிதாதானம். [வெற்றிலை.
௫. மேற்பூச்சு - சந்தனம். இலை -
௬. குசை - தருப்பை.
௯. பலி - ஒருவகைக் கருமம்.
௧௧. புலரி - விடியற்காலம்.
௧௩. ஐவகைவேள்வி - பிரமயாகம், தேவயாகம், மானிடயாகம், பிதிர்யாகம், பூதயாகமென்பன.
௧௪. பகிர்ந்து அனைவர்க்கும். இரைந்த - முழங்கிய.
௧௫. அங்கியின்கருமம் - அக்கினிகாரியம். தூங்கு இருள் உவா - செறிந்த இருளையுடைய அமாவாசை. அட்டகை=அஷ்டகைகள்.
௧௬. அயனங்கள் - தக்ஷிணாயனம், உத்தராயணம். தம் கருமங்கள். மூந்நூலைத் தேவர் கருமங்களில் வலமாகவும், தென்புலத்தோர் கருமங்களில் இடமாகவும், முனிவர் கருமங்களில் நடுவுறவும் தரிக்க.
௧௭. பவுட்டிகம் - புஷ்டியின்பொருட்டுச் செய்யப்படுங் கிரியை.
௧௯. வனத்தன் - வானப்பிரத்தன். பரித்திட - சுமக்க.
௨0. வற்கலை - மரவுரி. அடகு - இலை. அங்குரித்துள-முளைத்த. உகிர் - நகம்.
௨௩. எய்க்கும் - பொருந்தும். விழுப்பம் - சிறப்பு.
௨௪. பரபதம் - முத்தி. கற்பனை கட்டளை.
௨௬. புக்கில் - வீடு.
௨௭. தமி - தனிமை. சிலை - கல். திரிவு - மயக்கம்.
௨௮. தாரகமனு - பிரணவமந்திரம். வாலிய - தூய. ஆகாமியம் - ஆகாமியகருமம்.
௩0. யதி - சந்யாசி.

---

## ௧௪ - ஆவது அத்தியாயம். (ப. ௭0௫.)

௧. சேடு - பெருமை.
௫. சேடம் - மிச்சம். காணம் - பொற்காசு.
௭. அறல் ஈகை - நீரத்ததானம்.
௮. கூவல் - கிணறு.
௯. கூர்ந்த - மிகுந்த. அண்ணுறு இவந்து. தாவுகின்ற அறல், அறல் நீர்.
௧0 தன் என்றது செய்வித்தவனை
௧௧. தருவித்தான் - வருவித்தான்

கரு. கிரகம் - கரகம். ஆறில்ஒன்று - ஆறுபாகத்தில் ஒருபாகம்.

கசு. அழிபசி - அறிவுமுதலியவை அழிதற்குக் காரணமாகியபசி. சங்கை - அளவு. [ந்தனன் - பகுத்து.

கஎ. தென்புலவாணர் - பிதிரர். பகு

கஅ. கவிகை - குடை.

உ0. பாதுகை - பாதரக்ஷை.

உக. சகடம் - வண்டி. விளக்கு இடா - விளக்குவைத்து.

உஉ. அம்துகில் - அழகியஆடை.

உரு. விஞ்சைநல்குதல் - வித்தியாதானம்.

உ௫. பலதரு - பலமரங்களை.

உசு. பாங்கு - அழகு. அமர்ந்து - விரும்பி.

உஎ. பிரமாண்டதானம் - பிரமாண்டத்தைப்போலப் பொன்னால் ஒருருவம்செய்வித்துத் தானஞ்செய்தல். இகப்பன் - நீங்குவன்.

உஅ. காஞ்சனம் - பொன்.

ரு0. தாத்திரி - பூமி.

ருச. அரமகளிர் - தெய்வமங்கையர்.

ரு௫. கார்ப்பாசம்-பருத்தி. தேனு-பசு.

ருசு. சஞ்சிதம் - பழவினை.

ருஅ. கீர்த்திப்பது - சொல்லுவது.

ச0. கோவை - கொவ்வைக்கனி.

சஉ. கலவமஞ்ஞை - கலாபத்தையுடையமயில்.

சச. முகன்அமர்ந்து-முகமலர்ந்து.

ச௫. இருவரொன்றது, சிவபெருமானையும் திருமாலையும்.

சசு. இனையவற்றினை-சாளக்கிராமமுதலியவற்றை.

சஎ. சங்கை - சந்தேகம்.

சஅ. விழுமிது - சிறப்புடையதாக.

௫க. எள்ளல் - இகழ்தல்.

௫௫. நனனர் - நன்மை.

௫சு. புண்ணியகாலமுதலிய மூன்றனுள் ஒன்று.

சு0. வல் - விரைவாக.

சுஉ. அரந்தை - துன்பம்.

---

## க௫ - ஆவதுஅத்தியாயம். (ப. கககூ.)

க. ஆழியான் - திருமால்.

உ. பூவை வண்ணன் - காயாமலர்போன்ற நிறத்தையுடைய திருமால்.

ச. வீவ ஆகவும் - அழியவும்.

௫. மருட்சி - மயக்கம். நீல் நிறம் - நீலநிறம். கருத்தன் - தலைவன். சனித்த - உண்டாகிய.

எ. இயற்கைவடிவு புகலரிது.

க0. பூரிவிபவமா.

க௫. அங்கி - அக்கினி.

கஅ. வாளா - சும்மா. இமைக்கும் - பிரகாசிக்கின்ற. சரதம் - சத்தியம்.

கக. முடிவு நின்றுகாண்பன். உகங்கள் - யுகங்கள்.

உ0. வாள் - ஒளி. யாண்டும் - எவ்விடத்தும்.

உக. நோன்மை - வன்மை. மேக்கு - மேல்

உ௫. நீத்தமீது - வெள்ளத்தின்மேல்.

உசு. பற்று அறுதிக்கண்.

ருஉ. முகிழ்த்து - குவிதது.

ருரு. திகழ்தி - விளங்குகின்றாய்.

ருச. இறைமை - தலைமை. கருதின் நும்வயத்தமாய். தாங்கள் நம்மாயையால்.

ருசு. பரித்திட - காக்க.

ருஅ. பொருட்டு - காரணம்.

ருக. வருத்தினேம் - வருவித்தேம்.

௬0. அமுதவெண்கதிரோன் - சந்திரன். உடுக்கள் - நக்ஷத்திரங்கள்.

௬க. திகிரி - சக்கரம்.

௬சு. ஞானசம்பன்னன் - ஞானத்தோடுகூடியவன்.

சஎ. திலசு இல்ஆகமத்து.

சஅ. தண்தரும்.

## ௧௬ - ஆவது அத்தியாயம். (ப. ௧௨௦.)

௨. கடிந்து - நீக்கி.

௬. பைய - மெல்ல.

௭. துய்ப்பவர் - உண்பவர். கந்தம் - கிழங்கு. சிவை - வேர். பாசடை - பசுமையான இலைகள்.

௮. அருந்துறு - அருந்தி. துனி துன்பம்.

௧௦. உழி - இடம். பானுவின் - சூரியன்போல.

௧௨. தைவரா - தடவி. ஐயைம்பிராயம் - இருபத்தைந்துபிராயம்.

௧௩. வீக்கும் - கட்டிய.

௧௫. மட்டு - தேன். விகாசம் - மலர்ச்சி. குறங்கு - துடை.

௧௬. பாடகம் - ஓர் ஆபரணம்.

௧௭. கானம்-இசைப்பாட்டு. அடைந்தேம் - சென்றேம்.

௧௯. இன்னே - இப்பொழுதே. பிரகிருதி - இயல்பு.

௨௦. தணந்து - பிரிந்து.

௨௧. புக்கில் - வீடு; பன்னசாலை.

௨௨. பலி - பிக்ஷை.

௨௩. விஞ்ச - மிக பஞ்சி - பஞ்சு.

௨௪. நிவந்த - உயர்ந்த.

௨௫. தண்ணடை - குளிர்ந்த இலை. நரபதி - அரசன். தமரித்து - முழங்கி.

௨௬. அரும்ப - உண்டாக. யாம் அங்கு எழுப்பி.

௨௭. ஒருவி - நீங்கி.

௨௮. அந்தமாணிழையார்.

௨௯. வாசம் - தங்குதல்.

௩௨. பன்னிகள் - பத்தினிகள்.

௩௩. வலிதின் - பலாத்காரமாக.

௩௫. குறை - காரியம். திங்கள் - மாதம்.

௩௬. கன்றும் - கோபத்தால் தழும்பிய. அஞ்சாது - பயப்படாமல்.,

௩௭. நன்று, இகழ்ச்சிக்குறிப்பு

௩௮. வேணவா - ஆசைப்பெருக்கம். முன்தானையால் வீசி. பீலட - துன்பம்.

௩௯. ஈன்றவளென்னவே இனிது உவந்தனம். ஆற்றிய - தணித்த.

௪௦. காலொடெரிஎழ - காற்றும் நெருப்பும் உண்டாக. அழிந்து - தீயெழல்.

௪௨ ஆவண் - முனிவர்களிருக்குமிடங்களை.

௪௫. ஐயம் ஏற்க - பிச்சைஎடுக்க. அவர்தமை நோக்குகையில் என ஒரு சொல்வருவிக்க.

௪௮. இதம்பெற - இனிமைபெற.

௪௯. கேட்டு அற்புதத்தொடும். ஆ, இரக்கக்குறிப்பு. அரந்தை - துன்பம்.

௫௨. நுமக்கு முன்னிற்பரோ.

௫௩. அன்னோ அன்னோ - ஐயோ ஐயோ. கொன்னே - பயனில்லாமல். இன்னாஆகி - இனிமையில்லாதனவாகி.

௫௪. கண்ணுறுதல் - காணுதல். சங்கை - சந்தேகம். ஆடகம் - பொன்.

௫௫. தூய் - தூவி.

௫௬. நாப்பண் - நடு. கலாம் - சண்டை.

௫௭. செற்றம் - தணியாக்கோபம். மண்டும் உகங்கள்.

௫௯. விட்டு = விஷ்ணு - திருமால்.

௬௦. செம்மல் - இறைவன். சின்னம் - அடையாளம். நம்மால் அன்றி - நமது கருணையாலன்றி.

௬௨. பலிக்கும் - உண்டாகும். சதுரர் - திறமையுடையவர்.

௬௩. செய்யாது - செய்யாதபடி.

௬௬. செவ்வாகாத - நேர்மையாகாத. விடம்வேடம் - காமுகவேடம்.

௬௮. வயத்தன் - வசத்தன். சிவக்குறி - சிவலிங்கம்.

௬௯. சாதித்து - முயன்று.

௭௨. விடமவடிவு - விடவடிவு.

௭௩. பனுவல் - நூல்.

௭௬. மம்மர் - மயக்கம்.

௮௧. நியாதம் - நியாஸம். புரச்சரணை - மூலமந்திரத்தை ஜபித்தல்.

௮௨. பன்மம் - திருநீறு.

௮௬. அதன்முன் - அக்கோயிலின் முன்னே.

௮௮. பதிட்டை - பிரதிட்டை. தெருட்டி - தெளியச்செய்து.

## க௭ - ஆவது அத்தியாயம். (ப. கஙஉ.)

உ. கேண்மோ - கேள்; மோ, முன்னிலையசை. மிக இன்பமுற்றனர்.

ங. திரம்=ஸ்திரம் - நிலை.

௫. ஐயுறலுற்று ஒல்குவது.

௭. நல்குரவு - தரித்திரம்.

அ. அவ்வவ - அந்த அந்த.

௯. மாந்துவன் - அனுபவிப்பன்.

க0. தெய்வம் - ஊழ்வினை.

கஉ. இளிவரவு - இழிவு, வறுமை.

கங. அறிவாகும் அன்னதை.

கச. உம்மை - முற்பிறப்பு. உவந்து ஈயான்.

கரு. தானத்துக்கு - தானஞ்செய்தற்கு. அகநெகிழ்வு - மன இரக்கம்.

க௭. பாலித்தோர் - பாதுகாத்தவர்

க௯. வருத்தியும்-வருந்தச்செய்தும்

உக. முன் - முற்பிறப்பில் அந்நிலையின் தானம்.

உஉ. ஊன் தின்னுத் தூயர்.

உங. பொற்பினுல் மதித்தவராகி - அழகினால் தம்மைப்பாராட்டியவராகி

உச. அப்பொழுது -முற்பிறப்பில்

உரு. கல்லெரிப்பு - ஒரு நோய். விடம்இட்டவர் - விஷமிட்டவர்.

உ௭. தம் களவால்.

உஅ. பங்கம் - பழுது. சேதித்து- வெட்டி. வீக்கியவர் - கட்டியவர்.

உ௯ பங்கு - முடம். ஏக்கம் - இங்கே கையையும் காலையும் குறைத்து ஏங்கச்செய்தல்.

ங0. மண்ணுது - கழுவாமல். புக்கவரும் - புகுந்தவரும். குணமாட்சியின் - குணமாட்சியினையுடைய. அங்கு உதைசெய்தவர்.

ஙக. வெம்பிடகப்பிணி- மகாபிடக வியாதி; பிடகம் - கொப்புளம்

ஙங. வெப்பு - ஜ்வரம். வீசு அதிசாரம். விரணம் - புண். காசம் - சுவாசகாசம். கயநோய் - க்ஷயவியாதி.

ஙச. வளியாதியின் - வாதமுதலியவற்றால். ஏதிலர் - அயலார்.

ஙரு விநோதித்து - விளையாடி.

ஙசு. தேசிகர் - ஆசிரியர்.

ஙஅ அபஸமாரம்=அபஸ்மாரம் - காக்கைவலிப்பு. கவடு - வஞ்சனையால்.

ங௯. திரிகம் - மூன்றுஎலும்புகள் கூடியஇடம்.

சக. அவள்கொண்கன் - அவளுடைய கணவனை. இன்மை - வறுமை.

சரு. அவைக்கண் - சபையில்.

சசு. வாய்மை அழிவின்றி - மெய்மையழியாமல்

சஅ. அரந்தை-துன்பம். வாய்தல் - வாயில். தைனியம் - தீனத்தன்மை; எளிமை.

௫0. ஏது-காரணம். பீழைபெற்று - துன்பத்தைப்பெற்று.

௫க. நோதக - நோக.

௫ங தொழும்பு - அடிமை. எற்றுண்டு - மோதுண்டு. ஊசலின் - ஊஞ்சல்போல.

௫௫. வீற்றிருத்தர் - வேறிருத்தர்.

---

## க அ - ஆவது அத்தியாயம். (ப. கஙகூ.)

க. கன்றிய இளமான்.

உ. இழைத்தலால் - செய்தலால். சுவைப்பதிலை - இனிப்பதில்லை.

ங. பெட்பு - விருப்பம்.

ச. கடத்தி - நீங்கச்செய்து. ஒருவுதது - நீங்காததை. பிணிப்புண்டு பின்றொடரும்.

௫. இழையாநின்ற - செய்யாநின்ற.

௭. பழங்கண் - துன்பம்.

க0. செவ்வுடையோர் - செவ்வையுடையோர்.

கக. பூதசாதிகள் - பிராணிசாதிகள்.

க௭. வாதுவர்கள் - யானைப்பாகர்.

கஅ. காலை - காற்றை. புடபாகம் - புடத்திற்பகுவமாதல்.

௧௯. சொல்லின் இப்பிராணயாமம். வேர்வு - வியர்வை. கம்பிக்குங்காறும் - நடுங்கும்வரையில்.
௨0. வயம் - வசம்
௨௨. உழிதருதல் - சுழலுதல்.
௨௩. நிறுவி - நிறுத்தி.
௨௪. ஆதாரம் - மூலாதாரம்.
௨௭. செவ்வில் -செவ்வையால். கவ்வை - கவலை.
௨௮ இருபாற்றும் - இரண்டுபகுதியை யுடையதாகும்.
௨௯. பாவனம் - பாவனை.
௩௫. விகிர்தி - வேறுபாடு.
௩௮ சேதகம் - சேறு.
௪௪. பரிசனம் - தொடுதல்.
௫௨. முட்டாது - குறையாமல்.
௫௯. விசய, விளி

## ௧௯ - ஆவதுஅத்தியாயம். (ப. ௧௪௭.)

௧. ஆழியம் பெயர்படைத்துளவனம் - நைமிசம். விசாரம் - விசாரிதல்.
௨. யாங்கள்.
௨0 புதையிருள் - அமாவாசை.
௩௪. 'நாந்தாம்' என்றது, சூதரை.
௩௭. ஆழிநண்ணிய ஆரணியம் - நைமிசாரணியம்.

## ௨0 - ஆவதுஅத்தியாயம். (ப. ௧௫௨.)

௨. ஒருப்படுதல் - ஒருமைப்படுதல்.
௭ முட்டி - முஷ்டி; கைப்பிடி.
௧௩. மறு இல். அறுதியாக - முடிவாக.
௧௫. சாதகருமம் - ஜாதகர்மம்.
௧௭. நான்கு கரணமும் - அந்தக்கரணங்கள் நான்கும்.
௧௮. தோடம் - தோஷம். நியாதம்=நியாஸம் - விடுதல்.
௧௯. உறைத்து - உறுதியுற்று. கொத்தை - குருடு. குடீசகன் - குடிசையிலுள்ளவன்.
௨0. பகூதகன் - பலஇடத்துள்ள ஜலத்தையுடையவன்; எங்கும் உண்பவன் பிக்குகன் - பிக்ஷுகன். அஞ்சவிருத்தி - ஹம்ஸவிருத்தி.
௨௧. பரம அஞ்சவிருத்தி - பரமஹம்ஸவிருத்தி. சாந்தி - மனத்தையடக்கல் தாந்தி - சரீரத்துன்பங்களைப்பொறுத்துக்கொள்ளுதல். திதிக்கதை= திதிக்ஷுதா - சுகதுக்கங்களைப்பொறுத்தல். சவுசம் - சுசியுடைமை; வேறுவிதமாகச் சொல்லுவதுமுண்டு. நானம் - ஸ்நானம்.
௨௪. அறத்துறந்த-முற்றத்துறந்த.
௩௩. அளிய-அன்பமைந்த. தெளிதின் - தெள்ளிதின்.
௩௫. குலிசப்படையேந்தி - இந்திரன்.
௩௮. சோபனம் மங்களம்.
௩௯ உண்மையை இயம்பினன்.

## ௨௧ - ஆவதுஅத்தியாயம். (பு. ௧௫௭.)

௪. புத்தி - போகம். உமையாள் தலைநாளில். [தாண்டவம்
௯. பரமானந்தநடனம் - பரமானந்த
௧. உலகுக்கு இதமியத்.
௧0. நாணின்வனிதை - நாணினையுடையமங்கை. வறியூ தனியன் தனிமையையுடையவறியன்.
௧௧ அபுதன் - அறிவில்லாதவன். தருணன் - இளைஞன்.
௧௭. சித்திரைச் சித்திரை - சித்திரைமாதத்துச் சித்திரைநக்ஷத்திரத்தில்.
௨௨. ஓணம் - திருவோண நக்ஷத்திரம்.

உ௩. புரட்டை - பூரட்டாதி நக்ஷத்திரம்.
உ௫. பாத்து - பகுத்துக்கொடுத்து.
உ௬. ஏர்பு - எழுந்து.
உ௯. இவர்ந்து - விரும்பி.
௩௧. விரதமானது. உன்னின் அனைவர்க்கும்.
௩௩. புகுந்தவருடைய பாவமாகிய விறகுக்கு தாகம் - ஆசை.
௩எ. அயிக்கம்=ஐக்யம்.

---

## உஉ - ஆவதுஅத்தியாயம். (ப. ககூஉ.)

க. இந்த அத்தியாயமுதலியன வாசிட்டலிங்கத்திலிருந்து எடுக்கப்பெற்றவையாதலின் இச்செய்யுளால் விநாயகரைத்துதித்தார்.
உ. மருத்து உணவா - காற்றை உணவாகக்கொண்டு.
௩. சீர் உருத்திரம் - ஸ்ரீருத்திரம். கண்ணுற - தரிசிப்பதற்கு.
ச. புராணன் - பழையவன். உமாதேவியாரும் உடன்எழுந்தருளினரென்று கூறும் முதனூல்.
௬. ஆல் - ஆலமரம். ஆலின் மென்னிழல்உடையவனாகி - தக்ஷிணாமூர்த்தியாகி.
எ. நீற்றொளிபழுத்தமெய்யும். பணிகள்-ஆபரணங்கள். நளி-செறிவு.
௯. சனகன் - ஸனகர்.
கக. நன்று - மிக. சாமி - தலைவன்.
கஉ. நிமித்தம்-காரணம் உறவு-சம்பந்தம்.
க௩. இலக்கு - லக்ஷ்யம்.
கச. பதிகள் - ஸ்தலங்கள். பன்மம் - பஸ்மம். எதனால் அது பன்மமென்று பெயர்பெற்றது.
க௫. பாவகம் - தியானம்.
கஎ. எற்று - யாது. தாருவனம் - தாருகாவனம். அனையான் - அவன்
கஅ. ரிபு - ஒருசிவஞானி
க௯. சதுத்தன் - சதுர்த்தன்.

---

## உ௩ - ஆவதுஅத்தியாயம். (ப. ககூச.)

உ. கருமபாகம் - கருமங்களின்பரிபக்குவம்
ச அதிட்டிக்க - இடமாகக்கொண்டிருக்க. தலைப்படா - தலைப்பட்டு. மாமாயை - மகாமாயை.
௫. புனிதமாயை சுத்தமாயை. மற்றமாயை - அசுத்தமாயை
க0. இரணியம் - பொன்.
கக. கரு - கருப்பம்.

---

## உச - ஆவதுஅத்தியாயம். (ப. ககூஎ.)

௩. ஓவின்றி - ஒழிவின்றி. மலைவு இலாது - மாறுபடுதலில்லாமல்.
௬. சிக்க - அகப்பட
எ. எவ்வம் - குற்றம்.
க0. படிவம் - வடிவம். கொடுவரிக்காலோன் - வியாக்கிரபாதமுனிவர்.
அந்நகர் - சிதம்பரம்.
கக. புற்றிடம்செறிநகர் - திருவாரூர்.
கஉ. இம்பர்முத்தி - சீவன்முத்தி.
க௩. பருப்பதம் - ஸ்ரீசைலம். கழுமலம் - சீகாழி.
கச பொன்னிமாநதி - காவிரிநதி. நாற்கோட்டியானை - ஐராவதம். 'யாண்டு' என்பதன்பின், 'அங்கே' என ஒருசொல் வருவிக்க. முக்குளத்தைப் புஷ்கரமூன்றென்று கூறும், முதனூல்.
க௫. இடபத்திங்கள் - வைகாசிமாதம். இருட்சிஅடையப்பட்ட எண்திதி - அபரபக்ஷஅஷ்டமி.
க௬. அருத்தி-உண்பித்து. பானம்-பானகம், நீர்மோர் முதலியன. ஈர் உவா - அமாவாசை, பௌர்ணிமை.

கஅ. சுரை - கள்ளு.

உ0. மாகந்தனில்-மாகவருடத்தில்; மாகவருஷம் கஉ-வருஷங்களுக்கு ஒருமுறை வருவது.

உஉ. 'அத்தடம்' என்றது மாமக தீர்த்தத்தை. கைத்து - பொன்.

உடு. திகழ் - விளங்குகின்ற ஐயாறு - திருவையாறு; சூரியபுட்கரிணி, சந்திராமிர்த புட்கரிணி, இறைவனுடைய சடைக்கங்கை, அம்பிகையின் திருமுலைப்பால், திருநந்திதேவருடைய வாய்நுரை இவ்வைந்தும் நதிகளின்வடிவங்களாக இருக்கப்பெற்றமையின், இத்தலம் இப்பெயர் பெற்றது.

உச. சிலாதன் - ஒருமுனிவர்.

உகூ புண்ணியம் - தருமதேவதை.

உஎ. இந்திரைகாதலன் - திருமால். கந்தமாதனம் - ஒருமலை.

உகூ. உவணப்புள் - கருடன்.

டிக. ஏதம் - குற்றம்.

டிடு. விடு - விஷுபுண்யகாலம். இராகுவாவது கேதுவாவது சந்திரனையும் ஏதாவது ஒருகிரஹம் சூரியனையும் மறைக்கும் தினங்களென்பது முதனூற்கருத்து.

டிச. மற்றையொண்கிராணம் அங்காரககிரஹணமுதலியவை.

டிஎ. என - என்று இராமர்கேட்ப.

சஉ. பங்கி - ஆடவருடைய தலைமயிர்.

சடு. அக்கிரிக்கண் - அந்தக்கந்தமாதனமலையில்.

சரு கேதாரன் - ஒருமுனிவர்.

சகூ. கோபருப்பதம் - ஒருதலம். பசுக்களாற் பூசிக்கப்பெற்றமையின், இத்தலம் இப்பெயர்பெற்றது.

ருஎ. சீர்த்தது - சிறப்புற்றது.

ருஅ. பிறவித்தளை - பிறவியாகிய பந்தம். வடுகன் - வைரவக்கடவுள்.

ரு0. வசியம் - பிறரை வசமாக்கிக் கொள்ளுதல்.

---

## உரு - ஆவது அத்தியாயம். (ப. களரு.)

க. வேற்றுமை - வேறாயது; உனக்கு வேண்டுவதில்லையென்றபடி.

டி. தரும் ஆதனத்தில். பதிட்டித்து - பிரதிஷ்டித்து.

அ. மூவேழ்சுற்றம்: உக - குலத்தாரென்று முதனூலிற் காணப்படுகின்றது.

கக. கோவின்உலகம் - கோலோகம்.

கஉ. மருத்துவர்கள் தம்ஊர் - அசுவினி தேவருலகம்.

கடு. மான்றலைநாள் - மிருகசீரிட நக்ஷத்திரம். புனர்தம் - புனர்பூசம்.

கச. பாந்தளின்உலகம் - நாகலோகம்.

கரு. தென்புலத்தவர் வாழ்உலகு - பிதிருலகு. பகன் - ஒருசூரியன்.

கஎ. வானவர் கம்மியன் - துவஷ்டா. இந்திராக்கினி - ஒருதேவதை. இது புஷ்டியைக்கொடுப்பதென்பர்.

கஅ. மித்திரன் - ஒருசூரியன். மாடம் - உழுந்து.

உக. ஒருபாதர் - ஏகபாதர். அகிர்ப்புத்தினியத்தேவு - ஒருதேவர்.

உச. தீர்குவள் - நீங்குவாள்.

உகூ. ஒறுப்பன். தண்டிப்பன். வென்காண்பன் - முதுகுகாண்பன்.

உஎ. வந்தி - மலடி.

உஅ. மந்தவாரம் - சனிவாரம்.

உகூ. நிரயம் - நரகம்.

---

## உகூ - ஆவது அத்தியாயம். (ப. கஅ0.)

க. பன்மம் - பஸ்மம். பிர்ச்சனம் - வறுத்தல்.

உ சுரிபங்கி - சுழிக்கப்பட்டுள்ள தலைமயிர்.

டி. இரக்ஷை = ரக்ஷை-பாதுகாப்பு. பாஸனம் (விளக்கல்) செய்வது பவித்தமென்பர்.

ச. காரம்ஆக்குதலால் - அழியச்செ

ய்தலால்; க்ஷாரம் - அழிவு. உற்பவம்- தோற்றம்.

௬. அக்கினிகோத்திரம் - அக்னி ஹோத்ரம். விரசாமகம் - விரஜாஹோமம்.

௭. ஓமம் - ஹோமம். சமிதையந்தழல் - சமிதாதானம் அட்டில்-மடைப்பள்ளி.

௯. பொடி - திருநீறு.

௧0. அன்றிய - அல்லாத. மனு - மந்திரம்.

௧௧. அக்கினி முதலிய - 'அக்னி' என்னுமொழியை முதலாகப்பெற்ற. சாபாலம்=ஜாபாலம்.

௧௨. திரியாயுடமந்திரம் - சாமவேதமந்திரம். மேதாமனு - யசுர்வேதமந்திரம்.

௧௩. அஞ்சமந்திரம் = ஹம்ஸமந்த்ரம்.

௧௬. விரத்தி - நிராசை.

௨௩. இலாஞ்சனை - அடையாளம்.

௨௪. அணிந்தவரைக்கண்டு. [கது.

௨௬. தினத்தக்கது - தின்னத்தக்

௨௭. இறையும் - இறையளவும்; சிறிதும். எய்தேல் - அடையாதே.

௨௮. யதி - சந்நியாசி. [ஸ்நானம்.

௨௯. நிகளம் - விலங்கு. நானம் -

௩௧. தலையாகிய - முதன்மையாகிய. நேடித்தல் - தாமதித்தல்.

௩௨. போதம் - தெளிவு.

௩௩. புரத்தல் - பாதுகாத்தல். கவுரி - உமை.

௩௫. உயர்பதம் - உயர்ந்தபதவி. அக்கமாமணி - உருத்திராக்ஷமணி.

---

## உ௭ - ஆவதுஅத்தியாயம். (ப. ௧௮௪.)

௧. பொதிந்து - மூடி.

௨. ஆன்மமந்திரம் - ஹம்ஸமந்திரமென்பர். பரபதம் - பரதத்துவம்.

௩. கந்தரம் - கழுத்து. கனலி - அக்கினி.

௫. கவலைதுரப்பவன் - கவலையை ஓட்டுபவன். தெருமரல் - சுழலுதல்.

௬. துறப்பன் - நீக்குவன். துய்ப்பினும் - உண்டாலும்.

௧0. உயிர்த்துள இருவர் - தாய்தந்தையர். பலிகருமம் - சிராத்தம். பதத்தை மண்ணுநீர் - பாதத்தைக்கழுவியநீர்.

௧௧. மாலிகை - மாலை.

௧௨. வெள்காது - வெட்கமடையாமல். வல்விரைந்து - மிகவிரைந்து.

௧௩. இறும்பூது - ஆச்சரியம். விடமன் - விஷமன்.

௧௪. அற - மிக.

௧௫. நடுவனதுலகு - யமலோகம். குலீன - உயர்குலத்திற்பிறந்தவனே. யாம் கணித்து அறிந்து - நாம் கணக்கிட்டறிந்து.

௧௬. செறுத்திடு - கோபிக்கின்ற.

௧௭. சீரிய - சிறந்த.

௧௮. தாரகம் - பிரணவம்.

---

## உ௮ - ஆவதுஅத்தியாயம். (ப. ௧௮௭.)

௯. வன்னம்=வர்ணம் - எழுத்து.

௧௪. தணந்து-நீங்கி. ஓர்தனியனை- ஒப்பற்ற தனிமையையுடையவனாகி.

௧௫. கண்ணுறீஇ - பார்த்து. கந்தம் - கிழங்கு. ஐயம் ஏற்று - பிக்ஷை வாங்கி: இறையென்று - சிவபெருமானென்று.

௧௮. அவ்வுருவை - ஆய்ந்து. பாலனம் - பாயஸம். முற்பவம் - பழம்பிறப்பின் வரலாற்றை.

௧௯. பனீராயிரம் - பன்னீராயிரம்.

௨0. பலாசப்போது - புரசம்பூ.

௨௧. பிப்பிலச்சமிதை - அரசஞ்சுள்ளி.

௨௨. தண் தோடு அறுகு.

௨௩. நயந்து இழைத்திடின் - விரும்பிச்செய்தால்.

௨௪. இலக்கம் - லக்ஷம்.

௨௫. பீழை - துன்பம்.

௨௬. திறம்பல் - மாறுபடுதல்.

௨எ. கரந்து - மறைந்து. தென் பால்முகம் நோக்குபிரான் - தக்ஷிணா மூர்த்தி.

௩௧. நொடியில் - நொடிப்பொழுதில். நொய்ய - அற்பமான.

௩௩. தொகைஏற்ற-கணக்கேற்ற.

௩௬. எதி - சந்நியாசி.

௩௯. சன்னத்தம் - வீத்தம்.

௪0. முன் - முன்பு.

௪௩. பலம் - பிரயோசனம். [கிய.

௪௪. பிரிக்கரிதாய-பிரிக்க அரிதா

௪௭. அகன்றுவிடு - நீங்கிவிடு.

---

## ௨௯ - ஆவது அத்தியாயம். (ப. ௧௯௩.)

௨. ஏசற - ஏசுதலற. இம்மைய - இம்மைக்கு உரியன.

௩. கைத்து-கையின்கணுள்ளபொருளே. அம்மையின் - மறுபிறப்பின்.

௪. முனையில் - போர்க்களத்தில்.

௫. வேளாண்மை-உழவுத்தொழில்.

௬. மம்மர் - மயக்கம். நான்கு ஆச்சிரமங்களாகிய அவற்றை.

எ. வருணி - பிரமசாரி.

அ. வந்தனை - ஒருகிரியை.

௯. நல்ல ஔபாஸன ஓமம்.

௧0. வனத்தவன்-வானப்பிரஸ்தன். சருகு இலை. சோரவற ஆற்றல்.

௧௨. பலி - பிக்ஷை. வெண்பொடி-திருநீறு.

௧௩. மறைமுடிவு - உபநிடதம்.

௧எ. திமிரம் - இருள்.

௧அ. பிறன்இல்-பிறன்மனைவியை. மன்ன - நிலைபெற.

௨0. கேட்டி - கேட்பாய் பாவியர்க்குள் நீ வலியை.

௨௧. குமார்க்கம் - கெட்டமார்க்கம். பெட்பு - விருப்பம்.

௨௩. தீக்கித்து - தீக்ஷித்து.

௨௪. சீற்றர் - கோபமுடையோர். மூற்கரம் - ஓராயுதம். புடைத்து அலைத்து ஈர்த்து. நலிந்தனர் - நலிந்து.

௨௫. மீக்கொடு - மேற்கொண்டு. கழுமுள் - சூலம்.

௨௬. நடுவன் - யமன்.

௨எ. திறக்கொண்ணு- திறக்கமுடியாத. மறித்தும் - மீட்டும்.

௩0. மாந்தினை - அனுபவித்தாய். யாம் உன்னை.

௩௧. தொன்றுபட்டுள்ள - பழமையாயுள்ள.

௩௨. அமிர்தனுருதி - முத்தியையடைவாய். உவணமுயர்த்தவன்- கருடக்கொடியை உயர்த்திய திருமால்.

௩௩. திடம் - உறுதி.

௩௪. விரத்தி - நிராசை. ஒருவி - நீங்கி.

௩௫. விதாதாவாகி - செய்விப்பதாகி.

௩௬. திறம்பிடாது- மாறுபடாமல்.

௩எ. அருத்தம் - பொருள்.

---

## ௩0 - ஆவது அத்தியாயம். (ப. ௧௯௯.)

௧. ஏல் அவற்றினுள் - பொருந்திய அவற்றுள்.

௨. கதிர் - சூரியன்.

௩. அடுத்தது - இரண்டாம்யுகம்.

௪. நாற்பதத்தொடும் - நான்குகால்களோடும்.

அ. மூர்த்துஉகம் - மூநதியயுகம். முழுத்திடும் - பூர்த்தியுற்றிருக்கும். திருத்தி - திருப்தி. வாணுள் - வாழ்நாள்.

௧௧. ஔவியம் - பொறாமை.

௧௨. ஈயாமை - கொடாமை. ஆங்காரம் - அகங்காரம். ஆம்அனைத்தும் ஆகிய எல்லாம்.

௧௪. பனிப்பகை - சூரியனை, உருவிலான் முதலியவர்களை உருவுளான் முதலியவர்கள் நிந்திப்பார்.

௧௫. செய்பவர் எண்ணிலர்.

௧௬. விம்பம் - பிம்பம். திருமேனியை - தேவர்களின் திருவுருவங்களை.

கஎ. முரண் - மாறுபாடு.
கஅ. நாட்டமாகி - நாடுதலுற்று.
உ0. பரிசித்து - தீண்டி.
உக. வறிது - சும்மா.
உங. எற்றைஞான்றினும் - எந்நாளிலும்.
உச. காபாலம் - ஒருவகைமதம்.
உஅ. கறை - மாசு. துவராடை - காஷாயவஸ்திரம். தீர்த்தம் - புண்ணியதீர்த்தங்களை.
உகூ. கிருதம் - நெய்.
ஙக. தளை - விலங்கு. ஆதனம் - ஆசனம். தலைவரென இருப்பர்.
ஙசு. நிறுவிடுவர் - நிறுத்துவார். ஆகும் அளவை - இயன்ற அளவு. இனனுதன - துன்பம் தருபவைகள்.
ஙஎ. ஒழுக்கத்தில்.
ஙஅ. சருகுதிரள்-சருகின்திரட்சி-இன்சாரியை பெறாமல் நின்றது; திரள்கானமெனக் கூட்டிப்பொருள் கொள்ளினும் பொருந்தும். கணம் - க்ஷணம்.
ஙகூ. மிசையாததை - உண்ணுதற்குரித்தல்லாததை.
ச0. அறலினிடை - நீரினிடத்தே. வாயிலிகும்பம் - ஊமைக்குடம்.
சஉ. கிழத்தியாம் - உரியவளாவாள். பூசக்கரத்தில்-பூமியில். நொய்யவனும் - அற்பனும்.
சங. மணிகன்னிகை - மணிகர்ணிகைத்துறை.
சச. அகிலேசன் - விசுவேசர்.
சரு. அற்றைக்கு - அன்றைத்தினம்.
சஎ. சொன்றி - சோறு. சதுரன் - திறமையையுடையவன்; இகழ்ச்சி.

---

## ருக - ஆவது அத்தியாயம். (ப. உ0ரு.)

க. தேவதாருகாவில் - தேவதாருகாவனத்தில். தூயசிந்தையனுகிய புலகன். ஆதியென்பது ஒருவர்பெயர்.
உ. 'காகோலுகர்' என்னும்பாடத்திற்குக் காகர் உலூகரென்று பொருள்கொள்க. 'உதூர்தோது' என்பது ஒருவர்பெயர்.
ரு. பன்னிமார் - பத்தினிமார். கைமிக்கு - அதிகரிக்கப்பெற்று. முற்றினர் - சூழ்ந்தார்.
சு. ஆபிசாரம் ஆங்கு இழைத்தார். நீ யார் கொல் - நீயாவன்.
எ. பொங்கி - கோபித்து.
கூ. 'அன்று' என்பது ஐம்பால் மூவிடத்திற்கும்வரும்.
கக. சித்தர் - வித்தர். வியோமம் - ஆகாயம்.
கஉ. மேயின - விரும்பியவற்றை.
கங. அவண்ஒருவி - அவ்விடத்தை நீங்கி.
கச. அசைந்தது - நடுங்கியது.
கரு. குழீஇ - கூடி. குறுகுற்றனர் - அடைந்தார்.
கஎ. மட்குறு - ஒளிமழுங்காத.
ககூ. உமை அடுத்தும் - உங்களைச் சார்ந்தும்.
உக. எள்ளி - இகழ்ந்து. தவக்குறையால் ஐயோ. தவறு - குற்றம்.
உஉ. இல்லெலன்பான் - இல்லையென்பவன்.
உரு. துற்ற - நெருங்கிய.
உஅ. எந்நதியில்.
உகூ. ஒரீஇ - நீங்கி.
ஙக. அமைப்பு அரு - அமைத்தற்கு அரிய.
ஙங. காட்சியாகிய ஆநந்தவாழ்வு.
ஙசு. பிற்றைஞான்று - மறுநாள்.
ச0. தட்டுதல் - தடை.
சங. உடங்குவந்து-ஒருமிக்கவந்து.
சசு. உளையும் - வருந்துகின்ற.
சஎ. நிரந்தனர்-வரிசையாய்நின்று.
ருஉ. மறைமூலம் - பிரணவம். சேமுற்று - சேமமுற்ற.
ருங. ஒன்றும் அன்றுயாம்.
சூ0. யாவரும் எம்மைஅறியார்கள்.
சூஉ. வியம் - விசாலம்.
எ0. நுந்தமக்கு யாம் இயம்பினம்.
எஎ. சேடித்து - சேவித்து.
அக. ஆச்சிரமந்தொறும் சார்ந்தனம்.
அக. வில்லம் - வில்வக்கனி.

அஎ. உருசியா - இனிமைபயவாது; விருதிதொக்கது.
அஅ. பரிபூரகம் - பக்குவம்.
கூஉ. இகக்கினும் - கடந்தாலும்.
கூ௩. உயிரானது இதம் உற்றிட.
கூரு. ஆம் ஒழுக்கம்.
கூசு. அதைத் தாபித்தனர்.

க0எ. முயன்று - முயற்சிசெய்து. நயன்தரும் - இன்பத்தைத்தருகின்ற.
க0க. துயர்ந்திட - துய்ரமுறும்படி.
கக0. எக்குதல் - உள்ளே இழுத்துக்கொள்ளுதல்.
ககரு. நெடிது - நெடுங்காலம்.
கக்க. முந்தை - முற்பிறப்பு.

---

## ௩உ - ஆவதுஅத்தியாயம். (பு. உஉ0.)

உ. அன்னவர் பற்றினர். அனையர் பாங்கரில் - அவர்களிடத்தே. துற்றிய - நெருங்கிய.
௩. மோகத்தைத் தணந்து.
ச. பிரமன், எழுவாய். அவரைநோக்கியென ஒருசொல் வருவிக்க. ஒருமகவென்றது, உக்கிரனை.
சு. காமம் தீர்ந்தில.
எ. சாத்திகம் - ஸாத்துவிகம்.
அ. சீரை - மரவுரி.
க0. முகிழ்த்து - குவித்து. யாதினும் பரிவு ஒரீஇ - எந்தப்பொருளினும் பற்றுநீங்கி.
கஉ. மறுக்கரு - மறுத்தற்கரிய.
கச. வாழ்ந்தனராகி - மகிழ்ந்து.
கசு. இருபு - ரிபு.
கஎ. தழீஇனர் - தழுவினர்.
கஅ. தக்கிணை - தக்ஷிணை. போகம் - செல்வம்.
உஉ. இன்ன ஆறு இழைக்கின் - இந்தப்படியே செய்தால்.
உ௩. நோற்கின் - நோற்றால். நம்பிய - விரும்பிய.
உச. இல் - வீடு.
உஅ. உய்ய - பிழைக்க.
உக. திரிவுற - சஞ்சரிக்க.
௩உ. படுகர் - பள்ளம். பாலகர் - கேட்டுச் சிந்திக்கும் வன்மையுடைய மாணாக்கர்; 'ஒருபுதல்வன்' என்பர் பின்னும், ௩௩.
௩ச. நிதாகனென்பது அவன்பெயர்; இவனை 'பிரமன் மெய்ப்புதல்வன் மைந்தன்' என்பர் பின்னும்; எ0.
௩ரு. ஆரமுது - அரியஅமுதம். சீர்இருபு. தீஞ்சொல் - இனியசொல்.
௩சு. தெறடுறன - விரைவாக.

௩எ. முகிழ்த்திடுவ - உண்டாவன.
ச0. நிருதகம் = நிருக்தம் - சொல்லப்பட்டபொருள்; அநிருத்தம் = அநிருக்தம் - சொலலப்படாதபொருள்.
சஉ. பரிசம் - ஸ்பர்சம்.
ச௩. எவ்வாறு பொய்யாய்ப்போம் - எப்படிப் பொய்யாகிப்போமோ. பாறும் - கெடும்.
சச. உழிதந்து - சுழன்று. மருத்து - காற்று.
சஅ. உடு - நக்ஷத்திரம். மின்னுக்குழாம் - மின்னற்கூட்டம்.
சக. இலக்கு - லக்ஷ்யம். கரி - ஸாக்ஷி.
ருஉ. விச்சை - ஞானம்.
ரு௩. நச்சி - விரும்பி.
ருச. இருத்தி - இருப்பாய்.
ருரு. அன்னவூர்தி - பிரமதேவர்.
ருஎ. அயர்த்தனன் - மறந்தான். சின்னம் ஆதலால் - சிதைந்துபோனமையால்.
ருஅ. அதிதியைப்போன்று - விருந்தினனைப்போன்று.
ருக. அகத்துள் - வீட்டினுள்ளே. மிசைவித்தான் - உண்பித்தான். யாங்குளீர் - எங்கேயுள்ளீர்; உமதிருப்பிடம் யாதுஎன்றபடி.
சு0. இன்னுழி - இன்ன இடம். பின்னம் - வேறுபாடு. மற்று, அசைநிலை.
சுஉ. ஈனர் - தாழ்ந்தவர்.
சு௩. இருபு, எழுவாய்.
சுசு. இறந்து - கடந்து. ஏதொன்றும் பிணிப்பு இலனுகி - யாதொரு பந்தமும் இல்லாதவனாகி. வாளாது - சும்மா; "வாளா திருநதியாறம்பியென்றார்." (திருவிளை. மண்சுமந்த. சக.)

௬௯. வவ்வி - கிரகித்து.
௬௧. விஞ்சை - ஞானம். [ப்பாய்.
எ0. பரம்-கடமை. இருத்தி - இரு
எ௩. சேடங்கள் - சேஷங்கள்.
எ௪. தேசின் - தேசினையுடைய.

## ௩௩ - ஆவதுஅத்தியாயம். (ப. உஉ௯.)

உ. எய்த்து - இளைத்து. தேம்பி - வாடி.
௩. வருடுற்று - தடவி.
௫. சேண் - ஆகாயம்.
௧௧. நோன்பை.
௧உ. இந்திராணி.
௧௪. கண் துளி கொண்டிட.
உஉ. தவக்கொடிய - மிகக்கொடிய.
உ௩. வயம் - வசம். வருட்டல் வயமாக்கல்; "வாழே னெனவிருக் கும்வரிக் கண்ணியை நீவருட்டி" (திருக்கோவையார், உ௬௯.)
உ௪. அணிமை - அணிமா.
உ௫. எவ்வம் - குற்றம்.
உ௬. ஐந்தையும் அவித்து - ஐந்து இந்திரியங்களையும் அடக்கி.
௩௪. திவசம் - நாள். எள்ளி - இகழ்ந்து.
௩எ. அசேதனர் - அறிவில்லார்.
௪0 நெடிது உவகையால். இது உணர்த்து.
௪௩. இப்பனுவல் - இந்நூலை.
௪எ. அடைவின் - முறைமையால்.

## சிறப்புப்பாயிரம். (ப. உ௩௬.)

பொருனை நதி - தாம்பிரபன்னி நதி. வீரை - வீரவநல்லூர். பரிமள கவிராசனென்பது இந்நூலாசிரியருடைய சிறப்புப்பெயர். ஆனந்தக்கூத்த னென்பது இவரது இயற்பெயர்.

திருக்காளத்திப்புராணத்துள்ள

# அரும்பதமுதலியவற்றின் அகராதி.



அக்கமணி - உருத்திராக்கம். ௯, ௪௩, ௭௪, ௧௫௨.
அக்கரநியாசம். ௪௦, ௬௦
அக்கினிகோத்திரத்திருநீறு. ௧௮௩.
அக்கினிகோத்திரம். ௧௮௧, ௨௦௨.
அக்கினிப்பிரபன் - திருக்காளத்தியில் வழிபட்டுப் பேறுபெற்ற ஓரசுரன். ௩௨.
அகங்காரம் மூன்றுவிதம். ௧௧௫.
அகண்டம் - கண்டமில்லாதது. ௧.
அகண்டிதஞானம் - இடையீடில்லாத அறிவு. ௧௯௮.
அகம் - வீடு. ௨௨௭.
அகர்ப்பம் - மந்திரஜபமில்லாமற்செய்யும் பிராணயாமம். ௧௪௨.
அகழ்ந்து - பெயர்த்து. ௫௬.
அகளம் - அரூபம். ௧.
அகற்றல் - உச்சாடனம். ௨௩௨.
அகிப்புத்தினியர் - ஒருருத்திரர்; இப்பெயர் அகிர்ப்பத்நரெனவும் வழங்கும். ௧௭௮.
அகிலேசன் - விசுவேசர். ௩௦.
அகிற்குழம்பு. ௬௬.
அகின் முருடு - அகிற்கட்டை. ௧௪, ௨௪.
அங்கநியாசம். ௪௨.
அங்கம் ஆறு. ௪௨, ௫௦, ௬௦.
அங்கி - அக்கினி. ௧௪, ௧௧௫; சூரியன். ௨௦௧.
அங்கியாதானம் - அக்கினியாதானமென்னுங்கிரியை. ௧௯௮.
அங்ஙன் - அங்கு. ௧௨௨.
அசத்து - இல்லாதது. ௪௯, ௨௨௫.
அசித்து - அறிவில்லாதது. ௧௬௩.
அசுத்தமாயை. ௧௬௫
அசேதனா - அறிவில்லாதவர். ௨௩௪.
அஞ்சந்திப்பிள்ளையார். ௧, ௨.
அஞ்சமந்திரம் - ஹம்ஸமந்திரம். ௧௮௧.
அஞ்சவிருத்தி - ஹம்ஸவிர்த்தி; ஹம்ஸர் - ஒருவகைத்துறவினர். ௧௫௪.
அஞர் - வருத்தம். ௧௩௬.
அட்டகை - அஷ்டகை. மார்கழி, தை, மாசியென்னுமாதங்களில் அபரபக்ஷத்தில்வரும் அஷ்டமிகள். ௯௮.
அட்டமிதிதியிற்பூசிக்குமுறை. ௧௭௬.
அட்டமூர்த்திகள். ௫௫
அட்டில் - மடைப்பள்ளி. ௧௮௧.
அட்டிய - சேர்த்திய. ௭௪.
அடகு - இலை. ௯௮.
அடயோகம்-ஹடயோகம்.௧௪௦,௧௪௧.
அடாற்காரம் - ஹடாத்காரம், வலாற்காரம். ௧௪௧
அடுதல் - கொல்லுதல். ௧௧
அடை - இலை ௧௨௩
அடைப்பை. ௬௭.
அடையாநெடுங்கடை. ௧௯.
அண்டகபாலம் - அண்டத்தின்மேல்மூடி ௭௭.
அண்ணல் - தலைவன். ௮, ௯.
அணங்கு - மாது. ௧௧.
அணிமாவாதிசித்தி. ௬௪, ௨௩௨.
அணிமை - அணிமாவென்னுஞ்சித்தி. ௨௩௨.
அத்தன் - சிவபெருமான். ௮.
அத்தி - ஒருமரம், யானை. ௩.
அத்திரிமுனிவர். ௩௨.
அதர்வமந்திரம் ஆறு. ௧௮௧.
அதள் - தோல். ௯, ௧௪௮, ௧௫௩.
அதிகரித்தல் - அதிகாரியாதல். ௯௬.
அதிகாரம். ௧௧௭.
அதிசாரம் - ஒருநோய். ௧௩௬.
அதிட்டிக்க - இடமாகக்கொள்ள. ௧௬௫.
அதிதி - விருந்தி. ௧௦௭, ௨௨௭.
அதிதிபதம். ௧௭௭.
அதிராத்திரம் - ஒருயாகம். ௬௪.

சேம் - சேமம். ௨௧௧.
சேய - சிவந்த. ௧௦௯.
சேவடி - செம்மையானதிருவடி. ௨.
சேவை - ஸேவை - கைங்கரியம். ௧௧௭.
சேருடி - ஒருவகைவிருது. ௬௭.
சைமினி - ஜைமினிமுனிவர். இவர் வியாசமுனிவருடைய மாணாக்கர்; பூர்வமீமாம்ஸை இயற்றியவர். ௨௦௩.
சைவத்திப்பியஞானம். ௫௬.
சைவதேசிகர்மூவர். ௫௬.
சைவர்கள். ௪௫.
சொல் - சொல்லிலக்கணம். ௫.
சொல்கேன் - சொல்வேன். ௧௧.
சொற்ற - சொல்லிய. ௧௦.
சொறிதல். ௧௦௪.
சொன்றி - சோறு. ௨௦௫.
சோதிட்டு - சோதிட்டோமமென்னும்யாகம் ௬௨.
சோதிட்டோமம் - ஜ்யோதிஷ்டோமம். ௬௩.
சோதிட்டோமமுதலிய யாகங்கள். ௪௨.
சோதியிமையவர். ௩௬.
சோதிலிங்கம் - திருக்காளத்தியிலுள்ளமணிகர்ணிகேசர். ௬௩
சோமநாதம் - ஒருசிவஸ்தலம்; சந்திரன்பூசித்தது. ௧௭௨.
சோரர் - திருடர். ௧௧
சௌனகாதிமுனிவர். ௯.
ஞாதிரு - அறிபவன் - ௫௩.
ஞாளி - நாய். ௨௪௩.
ஞான்ற - தொங்கிய. ௭௪.
ஞான்று - தினம். ௭.
ஞானக்கொழுந்து - ஞானப்பூங்கோதையம்மை. ௮௬
ஞானச்சுடர்வடிவு ௫௮.
ஞானச்சோதி - இறைவன். ௩௯.
ஞானசம்பன்னன் - ஞானத்தால்நிறைந்தவன். ௧௧௯, ௧௫௭.
ஞானசிகாமணி. ௫. [௫௪.
ஞானசுந்தரி - ஞானப்பூங்கோதை.
ஞானப்பூங்கோதைபாகன். ௩௩.
ஞானப்பூங்கோதையம்மை. ௧, ௨, ௩, ௨௦, ௩௩, ௩௭.
ஞானப்பேரொளியாம்பேதை - ஞானப்பூங்கோதை. ௭௧
ஞானபோதம். ௯.
ஞானமுத்திரை - சின்முத்திரை. ௨, ௭௩, ௧௬௨.
ஞானயோகம். ௮, ௧௪௪.
ஞானவுயிர் - இறைவன். ௪௭.
ஞானவேந்தன் - அறிவாகியஅரசன். ௨௦௪.
ஞானியின்பெருமை. ௨௦௪.
ஞெமுங்க - அழுந்த. ௨௪௫.
ஞேயம் - அறியப்படும்பொருள். ௫௩.
தக்கயாகசங்காரமூர்த்தி, ௪௧, ௫௭.
தக்கன்யாகம். ௫௭.
தக்கிணாமூர்த்தி. ௫௮.
தக்கிணாமூர்த்தியின் திருவுருவம். ௧௬௨, ௧௬௩.
தக்கிணை - தக்ஷிணை. ௨௨௨.
தகை - தாகம். ௯௦.
தசமிதிதியிற்பூசிக்குமுறை. ௧௭௬.
தட்டுதல் - தடை. ௨௧௦.
தட்டை - கிளிகடிகருவி. ௧௪.
தடாகப்பிரதிட்டைமுதலியவை. ௧௦௬.
தண்டுலம் - அரிசி. ௧௪.
தண்டை - ஒருவகைக்காலணி. ௧௪.
தண்ணடை - குளிர்ந்தஇலைகள். ௯.
தண்ணளி - தண்ணியஅன்பு. ௮, ௧௦.
தண்ணீர்ப்பந்தர். ௬௮, ௧௦௬.
தணத்தல் - பிரிதல். ௧௪௬.
தண்மை. ௧௨௯.
தத்துவசிந்தை - வேதாந்தவிசாரம். ௯௯.
தத்துவஞானம். ௨௨௭.
தத்துவம்முப்பத்தாறு. ௫௯.
தத்துவவாக்கியப்பொருள் - மஹாவாக்கியப்பொருள். ௯௯.
தத்தை - கண்ணப்பநாயனாருடைய அன்னை. ௨௩௮.
ததைவு - நெருங்குதல். ௧௧௮.
தந்து - நூல். ௩௩.
தப்புரை - தவறியசொல். ௧௨.
தம்பம் = ஸ்தம்பம் - பற்றுக்கோடு. ௮௮.
தமரித்து - முழங்கி. ௧௨௩.
தமி - தனிமை. ௯௯.
தமியர் - தனிமையாகவுள்ளார். ௯௯.
தமிழ்க்காளத்திநகர். ௧௮.
தமிழ்மாமுனி - அகஸ்தியர். ௫, ௧௩.
தயவு - தயை. ([illegible]) ௮, ௯௪.
தருப்பணம் - தர்ப்பணம். ௬௦.